[19th August 1961

*Linking up of rivers*

* 1268 Q.—SRI N. R. THIAGARAJAN : கனம் பொது மராமத்து அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கங்கை, கோதாவரி, கிருஷ்ணு, காவேரி இணைப்பைப் பற்றி மத்திய சர்க்காருடன் நமது சர்க்கார் ஆலோசித்ததா ?

(இ) இதற்கு எத்தனை கோடி ரூபாய் செலவாகும் ?

THE HON. SRI P. KAKKAN : (a) No Sir.

(b) Not known.

SRI N. R. THIAGARAJAN : காலம் சென்ற ஸ்ரீநிவாச ஐயங்கார் காவேரியையும், கங்கையையும் இணைப்பதற்கு ஒரு திட்டம் தயாரித்தார் என்பதை வெகுகாலமாக நான் கேட்டு வந்திருக்கிறேன். சர். ஸி.. பி. ராமஸ்வாமி ஐயர் அவர்களும் தாம் ஒரு திட்டம் தயாரித்து வைத்திருப்பதாக அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிருர்கள். இத்தகைய திட்டம் ஏதேனும் சர்க்கார் வசம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : இப்பேர்ப்பட்ட திட்டம் இருந்தால் மத்திய சர்க்காரிடம்தான் இருக்கவேண்டும். அவர்கள்தான் இதைப் பரிசீலனை செய்யவேண்டும். இதைப்பற்றி மத்திய சர்க்காருக்கு எழுதியும் நாம் கேட்டோம். அவர்கள் கொடுத்துள்ள விடையைப் படிக்கிறேன் :

" As no particulars were available with the Government, the Ministry of Irrigation were addressed in the matter. The Government of India, Ministry of Transport and Communications were also contacted in the matter. The Government of India reported that it had no papers on the subject. Enquiries were also made from the Director, National Archives of India, which also failed to locate the papers on the subject. The Government of India, therefore, addressed Sir C. P. Ramaswami Iyer also. Therefore we don't find any scheme at present."

DR. (SRIMATHI) SOUNDARAM RAMACHANDRAN : திரு. ஸி. பி. ராமஸ்வாமி ஐயருடைய திட்டம் இன்னது என்று நமக்குத் தெரியாது. அதற்கு எழுதிக் கேட்டுக்கொண்டிருப்பதோடுகூட மகாநதி, காவேரி, கிருஷ்ணு ஆகியவற்றை இணைக்கும் திட்டம், கிருஷ்ணு, வடபெண்ணை இவற்றை இணைக்கும் திட்டம் ஆகியவற்றையாவது உடனடியாகப் பரிசீலனை செய்து அங்கங்கே ரிசர்வாயர் கட்ட நடவடிக்கை எடுத்துக்கொள்ளக் கூடாதா ? இப்போது எங்கு பார்த்தாலும் ஏகப்பட்ட வெள்ளம் ஏற்பட்டு சேதங்கள் எல்லாவிடங்களிலும் வருவதால் உடனடியாக இவற்றை இணைக்கப் புதிதாகவே ஆராய்ச்சி செய்ய இந்திய சர்க்காரை நம் சர்க்கார் வற்புறுத்துமா ?

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போட்டால் விவரமாகப் பதில் சொல்கிறேன்.

19th August 1961]

SRI N. K. PALANISAMI : 1876-ம் வருஷத்திலேயே சர். ஆர்தர் காட்டன் என்பவர் சில நிபுணர்களுடன் கலந்து பரிசீலனை செய்து இதற்கென ஒரு திட்டம் தயாரித்து சர்க்கார் முன் வைத்திருக்கிறார்களா இல்லையா ? அப்படியானால் அந்தத் திட்டத்தை சர்க்கார் இப்போதாவது பரிசீலனை செய்யக்கூடாதா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் இதைப் பற்றி ஏற்கனவே பல கேள்விகள் கேட்டிருப்பதனால்தான் இதை மத்திய சர்க்காருக்கு எழுதிக் கேட்டுப் பார்த்தோம்.

SRIMATHI A. S. PONNAMMAL : இந்தத் திட்டத்தை தென் மண்டலக் கவுன்ஸிலில் கொண்டு வருவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இது தென்மண்டலத்திற்கு மட்டும் அல்ல. இந்தியா பூராவுக்குமே சேர்ந்தது. இந்திய சர்க்கார்தான் இதுபற்றி முடிவு செய்ய முடியும். நாம் ஒன்றும் செய்ய முடியாது.

SRI M. KALYANASUNDARAM : கங்கைத் தண்ணீரைக் காவேரிக்குக் கொண்டு வருவது இருக்கட்டும். ஆந்திராவிலுள்ள கிருஷ்ணாவை காவேரியோடு இணைப்பது எந்த அளவில் இருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : இதைப்பற்றி ஏற்கனவே தென் மண்டலக் கவுன்ஸிலில் சொல்லியிருக்கிறோம். அப்போது முதன் மந்திரியாக இருந்த திரு. சஞ்சீவி ரெட்டி அவர்கள் உதவி செய்வதாக வாக்களித்திருக்கிறார்கள். அது சம்பந்தமாக இன்னும் முடிவு எடுக்கப்படவில்லை.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : சமீபத்தில் இது சம்பந்தமாகத் தெரிவிக்கப்பட்டுள்ள கருத்துக்களைப் பார்த்தோம். நமக்கு ஒரு சொட்டு கூட தண்ணீர் கொடுக்க முடியாது என்று இப்போது அவர்கள் சொல்கிறார்கள். ஆகவே வீணாக இதுபற்றி பிரசாரம் செய்துகொண்டிருக்காமல் தென்னகத்தில் இருக்கும் ஜல வசதிகளையாவது இம்ப்ரூவ் செய்ய நடவடிக்கை எடுக்கப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி யாரும் சொல்லவில்லை. அவர்களுடைய முழு ஒத்துழைப்பைப் பெற எல்லா வகையிலும் முயன்று கொண்டிருக்கிறோம்.

SRI K. ANBAZHAGAN : தலைவர் அவர்களே, தமிழ்நாட்டினுடைய நீர்வளத்தைப் பெருக்குவதற்கு முன்னாலேயே பல நிபுணர்களால் தயாரிக்கப்பட்ட திட்டங்கள் இப்போது அரசாங்கத்தினிடம் கிடைக்கவில்லையென்று சொன்னாலும் இப்போதேனும் பல நிபுணர்கள் அடங்கிய ஒரு குழுவை அமைத்துப் பல திட்டங்களைத் தீட்டுவதற்கு அரசாங்கத்தார் முயற்சி எடுப்பார்களா ? வட ஆந்திர மாகாணத்துத் தண்ணீர் கிடைக்காவிட்டாலும் காவேரி, பாலாறு ஆகிய இரண்டையும் இணைப்பதற்கு ஏதேனும் திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : முன்பு சொல்லப்பட்ட மாதிரி மத்திய சர்க்கார் இதைப் பரிசீலனை செய்தால்தான் நன்மை அளிக்கும் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.